(*iii*) Shifting of the head sluice of Grand Anicut Canal to a site about 2 miles higher up in order to minimise silting trouble in the canal.

**SRI R. SRINIVASA IYER**: இந்த கிராண்டு அணைக்கட்டு கால்வாய் தலைப்பில் மண் வந்து தூர்ந்து போய்விடுகிறது. இதைப்பற்றி 15 வருஷங்களாக ரிஸர்ச் நடந்துகொண்டிருக்கிறது. பூண்டி ரிஸர்ச் ஸ்டேஷனில் எஸ்டிமேட் கமிட்டி கூட போய் பார்த்தோம். இந்த ரிஸர்சை எவ்வளவு சீக்கிரம் முடிக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரம் முடித்து ஏதாவது ஒரு பரிகாரம் பண்ணவேண்டும் என்று சர்க்கார் உத்தரவிடுமா?

**THE HON. SRI P. KAKKAN**: மின்சார மந்திரி அவர்கள் சொல்லுவது போல ரிஸர்சை வெகு சீக்கிரம் முடிவுக்கு கொண்டு வரமுடியாது. நல்ல முறையில் ரிஸர்ச் செய்து பார்த்து, ஒரு நல்ல முடிவுக்கு வந்தபிற்பாடுதான் இதை அமுலுக்குக் கொண்டு வர முடியும். அந்த முறையில் ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கிறார்கள். இது பூர்த்தியான பிற்பாடு தான், அந்த முடிவை அமுலுக்குக் கொண்டு வரமுடியும்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Sir, is there any proposal before the Government to line up all these canals?

THE HON. SRI P. KAKKAN: Not all these canals, Sir. There is a proposal to do it in the Tanjore district.

*Balanced diet for children*

*** 2396 *Q*.—SRI S. M. ANNAMALAI**: கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்றிலிருந்து ஆறு வயதுவரை உள்ள குழந்தைகளுக்கு இலவச சத்துணவு தரும் உத்தேசம் உண்டா?

(இ) அப்படியானால், அதன் விபரமென்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU: (அ) Yes, Sir.

(இ) A statement [a] is placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI**: மேஜை மீது வைக்கப்பட்டுள்ள அறிக்கையில் பால் பவுடர் 36,000 குழந்தைகளுக்கு தரப்படுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. எல்லாக் குழந்தைகளுக்கும் அளிப்பதற்கு சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன? அதுபோல பால் பவுடர் வழங்குவதற்கு மத்திய சர்க்கார் பணம் கொடுப்பதற்கு முன் வந்திருக்கிறார்களா? அப்படியானால் அதன் விவரம் என்ன?

**THE HON. SRI M. A. MANICKAVELU**: இதற்குப் பணம் கொடுப்பதில்லை. வெளி நாடுகளிலிருந்து, **'UNICEF', 'WHO'** போன்ற சங்கங்களின் மூலம் இவைகள் வருகின்றன. பால்

[a] **Printed as Appendix VII on page 1098 infra.**

**15th December 1961]**

பவுடரைப் பொறுத்தவரையில் அந்த வகையிலே கொடுக்கப்படுகிறது. அதோடு மாத்திரமல்ல, 'பிஷ் லிவர் ஆயில்', மாத்திரைகள், 'காப்ஸூல்ஸ்', 'கால்ஷியம் டாப்லெட் ஸ்', 'வைட்டமின்' டாப்லெட்ஸ்' ஆகியவைகளும் பிள்ளைகளுக்குக் கொடுக்கப்படுகின்றன. அதோடு நம்முடைய நாட்டிலே 'மல்டி பர்பஸ் புட்'-க்கு ஏற்பாடு செய்து, அதுவும் விநியோகிக்கப்படுவதினாலே, இந்த 'டெபிஷியன்ஸியை' ஓரளவுக்கு குறைக்கலாம்.

*Eviction of tenants*

* 2397 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the number of applications for eviction of tenants disposed of by the Revenue Divisional Officers in the State under section 3 (4) of the Madras Cultivating Tenants Protection Act each year since 1956;

(b) the number of tenants involved in all the applications; and

(c) the number of applications on which orders of eviction were passed?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) to (c): A statement [a] showing the particulars is placed on the table of the House.

***Bridges***

***2398 Q.—SRI V. K. KOTHANDARAMAN :** கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை துறைமுகத்திலிருந்து நெய்வேலிக்குக் கொண்டு போகும் சாமான்களை ஏற்றிச் செல்லும் கனபாரம் தூக்கிச் செல்லும் வாகனங்கள் செல்ல எத்தனை இடங்களில் பாலங்கள் கட்டப்பட்டுள்ளன?

(இ) அவைகள் யாருடைய செலவில் கட்டப்பட்டன?

(உ) அவைகள் நிரந்தரமான பாலங்களா? அல்லது எவ்வளவு காலம் இருக்கும்?

(எ) பாலங்களைக் கட்ட எவ்வளவு செலவு ஆகியது?

THE HON. SRI P. KAKKAN : (அ) One temporary bridge across the Buckingham Canal near the Board of Revenue Buildings and 94 temporary diversions have been constructed.

(இ) These have been constructed at the cost of the Neyveli Lignite Corporation.

(உ) No. These structures are only temporary and will be in existence till all the heavy loads are moved.

(எ) Since the Neyveli Lignite Corporation has constructed the bridge and the diversions the details of expenditure incurred by them are not readily available with the Government.

---

[a] Printed as Appendix VIII on page 1099 infra